21st January 1961]

வர வசதியிருக்கிறது என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, இதைப்பற்றி சீக்கிரமாகவே ஆலோசனை செய்து அங்கு அவதிப்படும் மக்களுக்கு, அவர்களுக்கு இருந்து வருகின்ற இந்த தொல்லையை நீக்குவதற்கு சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது எங்கே யிருந்து தண்ணீர் கொண்டு வருவது என்பது பிரச்னை அல்ல. எங்கிருந்து பணத்தைக் கொண்டு வருவது என்பதுதான் பிரச்னை.

SRI K. VINAYAKAM : ஸார், ஜெயங்கொண்டான்புரம் என்ற பெயர் வந்ததே அன்றைய அரசன் வடக்கே சென்று கங்கைத் தண்ணீரைக் கொண்டு வந்ததாக கதைகள் கூறுவதுதான். இந்த அடிப்படையில்தான் ஜெயங்கொண்டான்புரம், கங்கை கொண்டான் என்ற பெயர்கள் எல்லாம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இப்போது கங்கையிலிருந்து கொண்டு வராவிட்டாலும் சமீபத்திலிருந்து கிடைக்கின்ற தண்ணீரை கொண்டு வந்து கொடுப்பதற்கு எங்கிருந்தாவது பணத்தை கொண்டு வருவதற்கு சர்க்கார் முயற்சிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கண் இல்லாத குருடனுக்கு கண்ணப்பநாயனர் என்ற பெயர் இருப்பதை நாம் பார்க்கிறோம். (சிரிப்பு.)

SRI S. LAZAR : In the list of priorities read out by the Hon. Minister there are names of municipalities and panchayats which are already having drinking water-supply and yet provision is being made for giving them protected water-supply. So far as Jayankondan is concerned, there is no drinking water available there, leave alone protected water-supply. In view of this acute condition will the Government provide necessary funds and take up the scheme so far as Jayankondan is concerned.

THE HON. SRI M. A. MANICKAVELU : If the Panchayat moves in the matter, the matter will be looked into.

*Anti-Hindi agitation by the Students*

* 56 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 16–8–1960-ந் தேதி இந்தி எதிர்ப்பு கோஷமிட்டுக் கொண்டு ஊர்வலமாக வந்து சென்னை சட்டக் கல்லூரி மாணவர்களும், பச்சையப்பன் கல்லூரி மாணவர்களும் முதல் அமைச்சர் அவர்களைச் சந்தித்தார்களா ?

(இ) அப்படியானால் அவர்கள் கோரியது என்ன ?

[21st January 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Yes, Sir.

(b) This procession was organized by the students to express their concern over the speech of the President of India on the language issue on 15—8—1960 at Madras which, according to them, contained sentiments contrary to the assurances given by the Prime Minister of India. After meeting the Chief Minister, the students were convinced that there was no basis for their fears.

SRI A. A. RASHEED : Is it not a fact that a pact has been arrived at among the political parties that students should not be dragged into politics? If so, may I know the persons or parties behind this agitation?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not have the information whether any political party was behind this move. But as I already stated the procession was organized because of certain apprehensions created in the minds of students. When these apprehensions were removed, the situation became normal.

**SRI S. M. ANNAMALAI :** *ஸார், அந்த மாணவர்களுக்கு இந்தி கட்டாய பாடமாக ஆக்கப்படமாட்டாது என்று முதல் அமைச்சர் அவர்கள் வாக்குறுதி தந்திருந்தார்கள். ஆனால் இப்போது இந்தி மறைமுகமாக புகுத்தப்பட்டு வருகின்றது. அதை தடுப்பதற்கு சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது?*

**THE HON. SRI C. SUBRAMANIAM :** *எந்த அடிப்படையில் இந்தி கற்றுக் கொடுக்கவேண்டும் என்பது பற்றி எல்லாக் கட்சித் தலைவர்களும் கலந்து ஆலோசித்து ஒரு முடிவு எடுக்கப் பட்டிருக்கிறது. அந்த முறையில்தான் இதற்கான கொள்கை வகுக்கப்பட்டிருக்கிறது. இதில் மறைமுகமோ அல்லது வேறு முகமோ இல்லை. நேர் முகமாகத்தான் வகுக்கப்பட்டிருக்கிறது.*

*Co-operative Stores*

* 57 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether there is any proposal to set up co-operative stores throughout the State to supply food articles and other essential consumer goods at controlled rates; and

(b) if so, the details thereof?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) No, Sir.

(b) Does not arise.

**SRI N. K. PALANISAMI :** *ஸார், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஜனங்கள் உபயோகிக்கும் பொருட்களுக்கு நியாய விலையை நிர்ணயிக்க வேறு ஏதாவது வழிகள் வகுக்கப் பட்டிருக்கிறதா?*

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** *இதைப்பற்றி இப்போது உருவான யோசனை ஒன்றும் அரசாங்கத்தினிடத்தில் இருக்கிறது என்று சொல்வதற்கில்லை.*